# அண்ணா









## நிதி அமைச்சர் நாவலர் தீவிரம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

மற்றியும் அரசு ஆலோசித்து வருகிறது.

### பொறுப்பு யாருக்கு?

இதனால் மிச்சப்படும் சர்க்கரையை கிராமக் கார்டுகளுக்கு அரைகிலோ அல்லது ஒரு கிலோ கூடுதலாகத் தரமுடியுமா என்றும் அரசு ஆலோசித்து வருகிறது.

விலைவாசி உயர்ந்திருப்பதற்கு காரணம் காட்டி இருக்கிறோம்

விலைவாசியைக் குறைக்கும் பொறுப்பு மாநில அரசுக்கும் இருக்கிறது. மத்திய அரசுக்கும் இருக்கிறது மத்திய அரசுக்கு அதிகப் பொறுப்பு இருக்கிறது.

மத்திய அரசின் உதவி அதிகமாக இருந்தால் இந்தக் குறைபாடுகளைப் போக்க முடியும் மாநில அரசுக்கு அதிகாரம் அதிகம்இருந்தால்நடவடிக்கை எடுக்க முடியும்;

எந்த ஆண்டிலும் மே மாதம் முதல் அக்டோபர் வரை விலை ஏறித்தான் இருக்கும்.

பருப்பு, தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெ போன்ற பொருள்கள் உற்பத்தியாகும் இடங்களிலேயே விலை அதிகரித்துள்ளது.

நம் மாநிலத்தைப் பொறுத்தவரை 19,792 டன் லெவி சர்க்கரையை மத்திய அரசு தருகிறது

ஒரு கோடியே 4 லட்[illegible]

### தி.மு.க. புகாருக்கு பதில்

[illegible]

### நெல் விலை

[illegible]

### கார்டுகளை புதுப்பிக்க அவகாசம் நீடிப்பு

[illegible]

வடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

### ஓட்டல் பண்டங்கள் விலையைக் குறைக்க நடவடிக்கை

ஓட்டல்உணவுப்பண்டங்கள் விலையைக் குறைக்க வேண்டும் என்று கோரினார்கள். இது குறித்து மாவட்டஆட்சிதலைவர்களை தகவல் அனுப்பும்படி கேட்டிருக்கிறோம்.

சிவில் சப்ளை கார்ப்பரேஷன் மூலம் ஓட்டல்களுக்கு நாம் உணவுப் பொருள்களைக் கொடுக்கிறோம் ஓட்டல் அதிபர்களும் அனுசரணையாக நடந்து கொள்ள வேண்டும். விலைகளை அவர்களே குறைத்துக்கொள்ள முன்வரவேண்டும். ஓட்டல்களை தரம் பிரித்து விலையைக் குறைத்துக்கொள்ளலாம். விலையைக் குறைக்காவிட்டால் அவர்களை அழைத்துப் பேசவும் இருக்கிறோம்.

இருக்கிற சட்டத்தைப் பயன்படுத்தி விலையைக் குறைக்க முயல்வோம். மத்திய அரசுமூலம்தேவையான சட்டத்தைப் பெற்றும் நடவடிக்கை எடுப்போம்.

[illegible]

### பாமோலின் எண்ணெ விவகாரம்

[illegible]

### சரிகை நூலுக்கு ஒருமுனை வரி

[illegible]

112வது வட்ட கழக கூட்டம்

## அமைச்சர் குழந்தைவேலு பங்கேற்பு

சென்னை, ஜூலை 25-சென்னை 112-வது வட்ட அனைத்திந்திய அண்ணா திமு கழக நன்றி அறிவிப்பு பொதுக்கூட்டம் இன்று (25ந்தேதி) வெள்ளிக்கிழமை மாலை 7 மணி அளவில் கே. கே. நகர் சிவலிங்கபுரத்தில் பி. ராமமூர்த்தி தலைமையில் கே. கிருஷ்ணன், கே. இராமநாதன் முன்னிலையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு கலந்துகொண்டுசிறப்புரையாற்றுகிறார் மற்றும் டி.க. கபாலிஎம் எல் ஏ திருப்பூர் மணிமாறன் எம் எல் ஏ கே எம் அப்துல் ரசாக் எம் எல் ஏ டாக்டர் சவுரிராஜன் எம் எல் ஏ ராம கிருஷ்ணபாபுதிருப்பத்தூர் ராமமூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

எஸ். எம். துரையரசன், மு. பச்சையப்பன், எஸ். வி. ஸ்ரீராமுலு, ஏ சுப்பையா, டி துளசி, எம் ஏழுமலை, ஈ பரமசிவம், கே சாகுல்கான், கே கிருஷ்ணமூர்த்தி, எம் கபாலி, எ தயாளன், ஏ பத்மநாபன், ஏ சுந்தரம், வி குப்பன், ந ஆறுமுகம், செல்லதுரை, ஜ் மூர்த்தி, து கணேசன், பால்ராஜ் மற்றும் கே எஸ் கோபால கிருஷ்ணன் ஆகியோரும் பேசுவர்.

காடுவெட்டி கண்ணப்பன் பேச்சு:

## உற்பத்திப் பொருளின் விற்பனைக்கு மத்திய அரசு தடைக்கல்

சென்னை, ஜூலை 25-விவசாயிகளின் உற்பத்திப் பொருள் விற்பனைக்கு மத்திய அரசு தடைக்கல்லாக இருக்கிறது என்று காடுவெட்டி கண்ணப்பன் கூறினர்.

மேலவையில் கழகஉறுப்பினர் காடுவெட்டி கண்ணப்பன் பேசும்போது கூறியதாவது:

மத்திய சர்க்கார் அரிசி சாப்பிடுபவர்களை புறக்கணித்திருக்கிறது என்று கொள்கை விளக்க குறிப்பில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

நெல் கரும்பு விளைவிக்கிற விவசாயிகளை மனிதாபிமானத்தோடு பார்க்கவேண்டும்.

மூன்றில் இரண்டுபங்கு மக்கள் நெல்லை உற்பத்தி செய்வதை மத்திய அரசு புறக்கணிக்கிறது.

மத்திய அரசு வரியை உயர்த்தி வருகிறது எங்கள் தொகுதியில் இரண்டு மோட்டார்களை பயன்படுத்திதான்நீரை எடுத்து வரவேண்டும். மின் வசதி இல்லாத இடங்களில் ஆயில்பயன்படுத்தித்தான் நீர் இறைக்கவேண்டும் உற்பத்தி செலவு அதிகமாகிக் கொண்டிருக்கிறது. ஆயில் விலையை மத்திய அரசு ஏற்றிக் கொண்டிருக்கிறது. ஆனால் எங்கள் உற்பத்தி பொருளைவிற்கஏன்மத்திய அரசு தடைக்கல்லாக இருக்கிறது?

புரட்சித்தலைவர் விவசாயிகளின் உணர்வுகளைப் புரிந்து கொண்டிருக்கிறார். அதனால்தான் நெல் விலையை உயர்த்தித் தரவேண்டும் என்கிறார்.

எங்கள் பகுதி மக்களின் உழைப்பு வீணாகாமல் கரும்பின் தரம் குறையாமல் பாதுகாக்கும் வகையில் உடனடியாக ஆயில் டீசலை மத்தியஅரசு தரவேண்டும்.

இவ்வாறு காடுவெட்டி கண்ணப்பன் கூறினர்.

துறைமுகம் தொகுதியில்

## காளிமுத்து- ராஜாமுகமது பேசும் கூட்டம்

சென்னை, ஜூலை 25. துறைமுகம் தொகுதி சார்பாக கழகப்பொதுக்கூட்டம் இன்று (25-ந்தேதி) வெள்ளிக்கிழமை மாலை 7 மணி அளவில் தம்புச் செட்டித்தெருவில் எம் கணேசன் தலைமையில் நடைபெறுகிறது.

அமைச்சர்கள் காளிமுத்து ராஜா முகமது மற்றும் ஜி கே சுப்பிரமணியம் எம் எல் ஏ காடுவெட்டி கண்ணப்பன் சி வி அன்புத்தம்பி, ஏ வி கிருஷ்ணமூர்த்தி, எம் எஸ் மணி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, ஏ.கே பீர்முகமது எம் வி ராமன், வண்ணை முத்துகுமார், கு கஜேந்திரபாபு வில்லன்கோதை, த தாஜுதீன், எம் அம்பலத்தரசு ஆகியோர் இக்கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

அமைச்சர் திருநாவுக்கரசு பங்கேற்கும்

## காமராஜர் பிறந்ததினவிழா

சென்னை, ஜூலை 25- பெருந்தலைவர் காமராஜர் 78-வது பிறந்தநாள் விழா பொதுக் கூட்டம் (இன்று 25-ந்தேதி) வெள்ளி மாலை 7 மணிக்கு திருமங்கலம் தி.வ. நகர் புதிய குடியிருப்பு அருகே நடக்கிறது.

டி. செல்வராஜ் தலைமை வகிக்கிறார்.

அமைச்சர் திருநாவுக்கரசு- தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் பி. நெடுமாறன் எம். எல். ஏ. குடிசை மாற்று வாரியத் தலைவர் டி. கே. கபாலி எம் எல் ஏ கே பாரமலை எம் எல் ஏ. ஏ எஸ் பொன்னம்மாள் எம் எல் ஏ ஜெசி டி பிரபாகரன் எம் எல் ஏ இ. மதுசூதனன் எம் கே டி. சுப்பிரமணியம் தி சு கிள்ளிவளவன் ராதாகிருஷ்ணன் மற்றும் பலர் பேசுவர்.




REGD. No. TN MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone 812818 | 4 பக்கம் விலை 35 காசு


1 Rs [illegible]

4

# அண்ணா

நீதி

எவன் வாழ்வதற்காக நீதியை இழந்திடமாட்டேன்என்று கூறுகிறானே கூறியபடி செயல்படுகிறானே அவனேஎல்லாப் பெருமைக்கும் உரியவனாகிறான்.

-பேரறிஞர் அண்ணா

குறள்

குறள் ஒரு அறிவுக் களஞ்சியம்பகுத்தறிவு மணிகளால்கோர்க்கப்பட்ட நூல்.

-தந்தை பெரியார்


நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர்: 4 | சென்னை 26-7-1980 சனி | வெளியீடு 27-7-1980 ஞாயிறு | இதழ் 258


சென்னை 43வது வட்டம் இந்திரா காங்கிரஸ் இளைஞர் பிரிவைச் சேர்ந்தவர்கள் பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

★ தரக்குறைவாகப் பேசினர்கள்
★ மேஜையை ஓங்கி ஓங்கி அடித்தார்கள்
★ புத்தகங்களை விசி எறிந்தார்கள்

தமிழக சட்டசபையில்

# தி.மு.க. ரகளை

## ஒருமணி நேரம் கூச்சல்-குழப்பம்

சென்னை, ஜூலை 26-திமுக தலைவர் கருணாநிதி எழுப்பிய ஒரு ஒழுங்குப் பிரச்னையைத் தொடர்ந்து திமுக உறுப்பினர்கள் கூச்சல் போட்டு ரகளை செய்து வெளிநடப்புச் செய்தனர். வெளியேறிய அவர்கள் புத்தகங்களைத் தூக்கி எறிந்து, மேஜையை ஓங்கி அடித்து, தரக்குறைவான வார்த்தைகளை உபயோகித்தனர்.

இன்று சட்டசபையில் கேள்வி நேரம் முடிந்த பிறகு கருணாநிதி ஒரு ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பி கூறியதாவது:-

பேரவையின் இருநூறாவது விதியின் கீழ் அலுவல் ஆய்வுக் குழுவின் முடிவுப்படி மானியக் கோரிக்கைகள் வரிசையாக எடுக்கப் படுகின்றன. அதன்படி நேற்று காவல்துறை மானியம் எடுத்துக் கொள்ளப் பட்டது ஆனால் ஒன்றரை மணிக்கு அவைக் கூட்டம் முடிக்கப்பட்டது.

இது குறித்து நேற்றே அலுவல் ஆய்வுக்குழு கூட்டப்பட்டு கலக்கப்படவில்லை. ஏதோ திட்டமிட்டு வேண்டுமென்றே பேசுகிறவர்களுக்கு அதிக அவகாசம் தரப்பட்டு காலம் நீடிக்கப்பட்டதாக சந்தேகம் எழத் தோன்றுகிறது.

அலுவல் ஆய்வுக் குழுவைக் கலக்காமல் நேற்று சபையை ஒத்திவைத்தது முறையா?

சுந்தர்ராஜன் (இ. காங்கிரஸ்)எங்கள் கட்சி கொறடா கொடுத்த பெயரில் இடம் பெறாத எங்கள் கட்சி உறுப்பினர் யசோதாவைப் பேச அழைத்தீர்கள். இது முறையா?

நெடுமாறன்: இந்த மானியத்தின் மீது எங்கள் கட்சி சார்பில் 3 பேர் பேச அனுமதித்தது பற்றி எதிர்க்கட்சித் தலைவர் குறிப்பிட்டார். என் ஒருவனுக்குத்தான் இதில்பேச அனுமதிதரப்பட்டிருந்தது அரிஜன சமுதாயத்தைச் சேர்ந்த பெண்கள் இந்த மானியக்கோரிக்கை மீது பேச வேண்டுமென்று பொன்னம்மாள் விரும்பினார் அதனால் பொன்னம்மாளும், யசோதாவும் பேச அனுமதிக்கப் பட்டார்கள் பெண்களுக்கு முக்கியத்துவம் தரக் கூடாதா?

### வலிந்து அழைத்தோமா?

[illegible] நேற்று மட்டும் ஏன் இந்த தாராளம் என்றுதான் கேட்டேன். மீண்டும் போலீஸ் மானியம் தான் இன்று தொடர வேண்டும்.

சபாநாயகர் ராசாராம்: யாரையும் பேசுவதற்கு வலிந்து அழைக்கவில்லை. 30க்கு மேற்பட்டவர்கள் பெயர் பெற்றுள்ளர்கள் ரகுமான் கானும் சுந்தர்ராஜனும் 'தங்களுக்கு அதிக நேரம் வேண்டும் என்றுர்கள் துணை சபாநாயகர் தான் நடத்தினர் பொன்னம்மாளையும் யசோதாவையும் பேசுவதற்கு அவர்தான் அனுமதித்தார் சபையில் உள்ள 4 பெண்களையும் பேச அனுமதிப்பதாக அப்போது அவர் கூறியிருக்கிறார்.

சபாநாயகருக்கு உள்ள உரிமைப்படிதான் அவர் இதனைத் தந்திருக்கிறார். நாலரை மணிநேரம் வரை தடை நடந்த பிறகுதான் சபை ஒத்திவைக்கப்பட்டது. மாலை 4-மணிக்கு மாவட்ட ஆட்சித் தலைவர் மாநாட்டுக்கு முதல்வர் செல்ல வேண்டியநிலை இருந்தது 4-மணி வரை சபை நடந்திருந்தாலும் முடிந்திருக்கும்.

ஆகவேதான் நாளை (இன்று) அலுவல் ஆய்வுக் குழுவில் இது குறித்து விவாதித்து இந்த மானியம் என்று எடுத்துக் கொள்ளப்படும் என்று சொல்லி பேரவையை ஒத்திவைத்தேன்.

எதிர்க்கட்சித் தலைவர் சந்தேகப்படும் அளவுக்கு எதுவும் நடக்கவில்லை.

கருணாநிதி: அலுவல் ஆய்வுக்குழு முடிவு எடுத்திருக்கிறது அந்த முடிவு அலட்சியப்படுத்தப்பட்டுள்ளது.

சபாநாயகர்: அலுவல் ஆய்வுக் குழுவை அவமதிக்கவில்லை. இதில் உள் நோக்கமும் இல்லை. வெளி நோக்கமும் இல்லை. நேற்று சபையில் அந்த நேரத்தில் எதிர்க்கட்சித் தலைவரும் இல்லை துணைத் தலைவரும்இல்லை.

### கற்பனை வேண்டாம்

கருணாநிதி: துணைக் கொறடா மூலம் அழைத்திருந்தால் நான் வந்திருப்பேன், முதல்வர் பேசப் போவதில்லை என்பது 11 மணிக்கே தெரியும் அல்லவா?

சபாநாயகர்: கற்பனைக்

(2-ம் பக்கம் பார்க்க)

## டாக்டர் நாவலர் மோரிஸ் செல்கிறர்

சென்னை, ஜூலை 26. உலகத்தமிழ் பண்பாட்டு மாநாட்டில் கலந்து கொள்ள மோரிஸ் நாட்டுக்கு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் செல்கிறார் ஆகஸ்டு 2ந்தேதி இரவு 10மணிக்கு டாக்டர் நாவலர், அமைச்சர் அரங்கநாயகம், சென்னைப் பல்கலைக்கழக துணைவேந்தர் ஜி ஆர் தாமோதரன், உலகதமிழ்ஆராய்ச்சி நிலைய இயக்குநர் எஸ் வி சுப்பிரமணியம் ஆகியோர் பம்பாய் சென்று அங்கிருந்து மோரிஸ்தீவுக்குசெல்வார்கள்

தமிழ்பண்பாட்டு மாநாட்டை மோரிஸ் தலைமை அமைச்சர் ராம்கூலம் 4ந்தேதி தொடங்கி வைக்கிறார்.

மாநாட்டுக்குப் பிறகு டாக்டர்நாவலர் லண்டன் ரோம், பாரிஸ், ஏதென்ஸ் ஜெய்ரோ ஆகியநகரங்களுக்குச் சென்று தமிழ் ஆராய்ச்சி நிபுணர்களை சந்திக்கிறார்.

தமிழகத்தில் அடுத்த ஆண்டு நடைபெறும் 5-வது உலகத் தமிழ் மாநாடுபற்றி அவர்களுடன் ஆலோசனை நடத்து வதுடன்அவர்களைமாநாட்டுக்கு வருமாறும் நாவலர் அழைப்பு விடுப்பார்.

இதுவரை 1 லட்சத்து 13 ஆயிரம்பேர் பலனடைந்த திட்டம்:

## மேலும் 3 ஆயிரம் பேருக்குமுதியோர் உதவித் தொகை

அமைச்சர் கோமதி சீனிவாசன் அறிவிப்பு

சென்னை, ஜூலை, 26 முதியோர் ஓய்வு ஊதியத் திட்டத்தின் கீழ் இது வரை 1லட்சத்து 12ஆயிரத்து 800 பேர் பயனடைந்துள்ளனர். நடப்பு ஆண்டில் மேலும்3 ஆயிரம் பேருக்கு உதவித்தொகை வழங்கப்படும் என்று அமைச்சர் கோமதி சீனிவாசன் கூறினர்.

சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட சமூகநலக்கொள்கை விளக்கக் குறிப்பில்அமைச்சர் கோமதி சீனிவாசன் கூறியிருப்பதாவது:-

மகளிர் நலத்துக்காக தாம்பரம்தஞ்சை கடலூர் நெல்லை சேலம் ஆகிய 5 இடங்களில் சேவை இல்லங்கள் நடத்தப்படுகின்றன சமூகத்தில் ஆதரவற்ற நிலையிலுள்ள 18 முதல் 40 வயது வரையிலான பெண்களுக்கு ஆதரவு அளிப்பதே இந்த இல்லங்கள் நடத்தப்படுவதன் நோக்கம்.

பெண்களுக்கு 3ஆண்டு கள் கல்வி கற்பிக்கவும் ஒராண்டு தொழில் பயிற்சி அளிக்கவும் இந்த இல்லங்களில் வசதி அளிக்கப்பட்டுள்ளது.

பணிபுரியும் பெண்கள் 25பேர் தங்கும் அளவில் சென்னை நகரில் ஒரு விடுதி இத்துறையால் நடத்தப்பட்டு வருகிறது. சென்னை, திருச்சி, மதுரை,கோவை, சேலம் அல்லது நெல்லை ஆகிய இடங்களில் பணிபுரியும் பெண்கள் இல்லங்கள் ஆரம்பிக்க 1980-81ம் ஆண்டு இரண்டாம் பகுதி திட்டங்களில் ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது.

வடஆற்காடு மாவட்டத்தில் இரண்டும் பெரியார் மாவட்டத்திலொன்றுமாக 3 தையல் பயிற்சி நிலையங்கள் ஆரம்பிக்கவும் ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது.

### தீப்பெட்டி தொழில் பயிற்சி

1980 81ல் மேலும் 267 தொழில் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்படும் இச்சங்கங்கள் 5,340 ஊரகப் பெண்களுக்கு தீப்பெட்டித் தொழிலில் பயிற்சி அளிக்கும்.

250கிராமப் பெண்களுக்கு பனமரத்தொழில் களில் 1980-81ல் வேலைவாய்ப்பு அளிக்கப்படும்.

உலக வங்கி உதவியுடன் ரூ 39.50 கோடி செலவில் தமிழ்நாட்டில் செங்கல்பட்டு, மதுரை, வடஆற்காடு, ராமநாதபுரம், திருநெல்வேலி புதுக்கோட்டை ஆகிய 6மாவட்டங்களில் ஒருங்கிணைந்த சத்துணவுத் திட்டம் 1980-85 ஆண்டுகளில் அமுல் நடத்தப்படும்குழந்தைகள் கர்ப்பிணிகள், பால் கொடுக்கும் தாய்மார்கள் ஆகியோரின் ஆரோக்கியத்தை உயர்த்தும் திட்டம் இது.

இத்திட்டத்தின் பல்வேறு பிரிவுகளை ஒருங்கிணைத்து செயல்படுத்த திட்ட ஒருங்கிணைப்பாளர் அலுவலகம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது.

சிறப்பு சத்துணவுத் திட்டத்தின் மூலம் 2லட்சத்து 76ஆயிரத்து 530பேர் பயன் பெறுகிறார்கள்.

உடல் உறுப்பு குறைந்த 1000 குழந்தைகளுக்கு இரும்புக்கவசமிட்ட காலணிகளை இலவசமாக வழங்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இத்திட்டத்திற்காக அரசு ரூ. 2.5 லட்சம்

(2-ம் பக்கம் பார்க்க)

## தமிழகம் முழுவதும் குடிசைகளுக்கு மின் இணைப்பு: பண்ருட்டி தகவல்

சட்ட சபையில் கேள்வி ஒன்றுக்கு பதலளிக்கையில் அமைச்சர் பண்ருட்டி கூறியதாவது:-

அரிசன மற்றும் ஏழைகளின் குடிசைகளுக்கு மின் இணைப்பு கொடுப்பதை விரிவுபடுத்தும் திட்டம் தமிழகம் முழுவதும் நிறைவேற்றப்படும்.

மனுசெய்யப்பட்டதேதியின் அடிப்படையில் மட்டும் முன்னுரிமை அளித்து பம்புசெட்டுக்கு மின்சாரம் வழங்கு வதைதுரிதப்படுத்தும் நோக்கத்தில் 78ம் ஆண்டு ஜூலைமாதம் முதல் புதிய முறை அமுலாக்கப்பட்டு வருகிறது.

1,93 லட்சம் குடிசைகளுக்கு மின் இணைப்பு வழங்கப்பட்டுள்ளன.

43 லட்சம் மனுக்கள் மின் இணைப்பு கேட்டு வந்துள்ளன,

தாழ்த்தப் பட்டவர்கள் பம்பு செட் வைக்க முன்வந்தால் அவர்கட்கு 20 சதவிகிதம் மனுக்களில் முன்னுரிமை செய்து ஒதுக்கீடு செய்யலாமா என்பதுபற்றி அரசுஆலோசித்து வருகிறது,

1980ம் ஆண்டில் 46,270 பம்புசெட்டுகளுக்கு மின் இணைப்பு வழங்கப்பட்டது.

இந்த ஆண்டு ஏப்ரல் 1-ந்தேதி வரை மொத்தம் 2,36240 மனுக்கள் நிலுவையில்உள்ளன.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி கூறினர்.

கோதுமை ஊழல் கோமானே

## பாரதியின்பாடல் பாடமாகட்டும்!

புடம் போட்டு எடுக்கப்பட்ட தங்கத்தை 'நீ பித்தளையோடு சேர்ந்திருந்தாய்; ஆகவே, உன்னை ஆபரணமாக்கி அணியமாட்டேன்'என்பது அறிவுடைமை ஆகாது.

'நீ முள்ளோடு இருந்தாய்-வேண்டாம் போ' என்று ரோஜாவை ஏற்க மறுப்பது புத்திசாலித்தனமாகாது

கோதுமை பேர ஊழல் பேர்வழி கருணாநிதியோடு இருந்தார் என்பதற்காக அரிசி பேர புகாரில் நிரபராதி என நிரூபிக்கப்பட்ட ப உ. ச வை அண்ணா தி மு க. பொதுச்செயலாளராக்கியதில் என்ன தவறு?

அது கிடக்கட்டும்.

கொள்ளைக்கூட்டத்தலைவன் கருணாநிதி' என்ற மனோகரனை தி மு க.வில்சேர்த்துக்கொண்டார்களே!

முன்னவருக்குத்தான் சுயமரியாதை இல்லை. பின்னவருக்காவது விவஸ்தை வேண்டாமா?

"கோதுமை வியாபாரத்தில் கொள்ளையடித்தார் கருணாநிதி" என்று குற்றமசாட்டி வழக்குத் தொடர்ந்திருப்பது இ. காங்கிரஸ்!

"பூச்சி மருந்து தெளிப்பு விவகாரத்தில் லஞ்சம் வாங்கினர் கருணாநிதி" என்று வழக்குப போட்டது இ காங்கிரஸ்!

32 லட்சத்துக்கு நூறு ரூபாய் நோட்டுகளை சில்லரை நோட்டுகளாக சென்னை இந்தியன் ஓவர்சீஸ் வாங்கியில் கருணாநிதி மாற்றியதாகக் குற்றம்சாட்டியது இ. காங்கிரஸ்.

வீராணம் ஊழல்பற்றி கதைகதையாக எழுதினது இ காங்கிரஸ் ஏடுகள்!

இ. காங்கிரஸ் தி மு க வோடு கூட்டு சேர்ந்திருப்பது என்?

தி மு க தலைவருக்குத்தான் மான அவமானம் இல்லை; இ. காங்கிரஸ் யோசிக்கவேண்டாமா?

வழக்குகளுக்குப் பயந்து கொண்டு, வளைந்து கொடுக்கும் பண்பாளர் இதற்காக கவலைப்பட வேண்டாம்,

பாவம், கோதுமையை மேலும் நாம் குடைய விரும்பவில்லை.

இ. காங்கிரஸ் உதவியோடு பதவி எதிர்பார்த்தவர் ஏமாற்றத்தின் எல்லைக்கே துரத்தப்பட்டுவிட்டார்,

பாவம்! அவரை மேலும் புண்படுத்த விரும்பவில்லை.

ஆனல்--

"மானம் சிறிதென்றெண்ணி வாழ்வு பெரிதென்றெண்ணும்"

என்ற பாரதியாரின் பாடல் பாடமாகட்டும்.

## மதிப்பீட்டு குழுவுக்கு சமரசம் தலைவர்

சென்னை, ஜூலை 26-மதிப்பீட்டுக்குழுத் தலைவராக டாக்டர் சமரசம், பொது நிறுவனங்கள் குழுத்தலைவராக த அன்பழகன் பொதுக்கணக்குக் குழுத் தலைவராக என். எஸ் வி சித்தன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளதாக சபாநாயகர் ராசாராம் அறிவித்தார்.

46-வதுவட்ட

## கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, ஜூலை 26-துறைமுகம் தொகுதி 46வதுவட்டம் சார்பாக கழகப் பொதுக் கூட்டமும் கலை நிகழ்ச்சியும் 26ந் தேதி மாலை 7 மணி அளவில் கொண்டித்தோப்பு ரங்க பிள்ளை தோட்டத் தெருவில் எம் பி ராமன் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் தலைமை நிலைய செயலாளர் எம் எஸ் அப்துல்காதர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகிறார். மற்றும் விஜயபாலன், ஏ வி கிருஷ்ணமூர்த்தி தமிழரசு, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி சுந்தரம், அண்ணாதாசன், சி ஜி ஆர் கஜேந்திரபாபு ஏ க பீர்முகமது காதர் ஆகியோர் பேசுகின்றனர் இரவு 9மணிக்கு வாசன் விமலா குழுவினரின் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

### பேச்சாளர் முகவரி

பி டி இராகவன்
46, அண்ணா வீதி,
திருவான்மியூர்,
சென்னை-600 041
போன்: 413646

அரங்கராசன் புகழாரம்

# அரிஜன மக்களுக்கு கல்விச் சலுகை அளித்த கழக அரசு

சென்னை, ஜூலை 26- அரிஜன ஏழை குழந்தைகளுக்கு ஏராளமான கல்விச் சலுகைகளை புரட்சித் தலைவரின் கழக அரசு தான் அளித்துள்ளது என்று கழக எம் எல் ஏ அரங்கராசன் கூறினார்.

சட்டப்பேரவையில் அரிசன நலத்துறை மானியத்தில் கழக உறுப்பினர் உப்பிலியாபுரம் வெ அரங்கராசன் பேசும்போது கூறியதாவது:-

புரட்சித்தலைவர் தலைமையில் அரசு பொறுப் பேற்றதற்குப் பின்னால் தான் ஏழை எளிய பாட்டாளி மக்களாகிய அரிசனங்கள், பழங்குடியினர் ஆகியவர் நன்மை அககம் பெற்றுள்ளனர். பழங்குடியினர் மேம்பாட்டுத் திட்டத்திற்கு 20 கோடிரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

## மதிய உணவு

பள்ளியில் படிக்கும் அரிசன, பழங்குடியினர் மாணவரின் பெற்றோர்களின் ஆண்டு வருமானம் ரூ. 3000க்கு மேற்பட்டவர்களுக்கு கல்வி சலுகை கிடையாது. ஆனால் புரட்சித்தலைவர் பொறுப் பேற்றதற்குப் பின்னர் மாணவரின் பெற்றோர்கள் வருட வருமானம் கணக்கில் கொள்ளாமல் உயர் நிலைப் பள்ளிவரை படிக்கும் ஏழைஎளிய மக்களாகிய அரிசன பழங்குடி மக்களுக்கு எல்லாவித கல்விச் சலுகைகளும் கொடுக்கப்பட்டன,

கல்வியில் சிறந்த மாணவர்களுக்கு "காந்தி அடிகளின் நினைவுச் சிறப்புக் கல்வி உதவித் தொகை" தற்சமயம் அளிக்கப்படுவது பாராட்டத் தக்கதாக உள்ளது. அரிசன பழங்குடியினர் பள்ளியில் அளிக்கப்படும் மத்ய உணவின் அளவை உயர்த்தியது பாராட்டத்தக்கவொன்றாகும்.

பழங்குடியினர் திட்டத்தின் கீழே ஒதுக்கப்படுகின்ற பணம் அத்தனையும் செலவிடப்படுகிறதா என்று பார்க்க வேண்டும். ஏன் என்று சொன்னால் இப்படி ஒதுக்கப்படுகின்ற பணம் முழுவதும் செலவிடப்படாமல் ஆண்டு இறுதியில் மீதியாக்கப்பட்டு திருப்பிச் செலுத்தப்படுகிற நிலை ஏற்படுகிறது.

எனவே அதிகாரிகள் இதிலே கவனம் செலுத்தி, இதற்கு ஒதுக்கப்படுகின்ற பணம் முழுமையாகச் செலவிட நடவடிக்கை எடுக்க வேண்டும். அதிகாரிகள் ஒத்துழைப்புத் தந்தால்தான் இந்த ஆட்சிக்கு நல்ல பெயர் ஏற்படும் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

மலைவாழ் மக்களுக்காக உள்ள லாம்ப் கூட்டுறவு சங்கங்களில் இன்னும் அதிகாரிகள் தான் கமிட்டி உறுப்பினர்களாக இருக்கிறார்கள். இதனால் பழங்குடியினர் முன்னேற்றத்திற்கு எந்தவித பலனும் இல்லை, எனவே அதைக் கலைத்து பழங்குடியினராக உள்ளவர்களை நியமித்து நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

## தனி நபர் கொள்ளை

மலைகளில் விளைகின்ற பொருள்களை எல்லாம் லாம்ப் கூட்டுறவு சங்கம் மூலமாக வாங்க வழிவகை செய்ய வேண்டும். இன்னும் தனிநபர்கள் கொள்முதல் செய்து கொள்ளை லாபம் அடித்து வருகிறார்கள். எனவே இந்த முறை ஒழிக்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்,

டாப் செங்காட்டுப்பட்டியில் ஒரு மருத்துவமனை கட்டி முடிக்கப்பட்டு இரண்டாண்டுகள் ஆகின்றன. இன்னும் மருத்துவமனை திறந்துவைக்கப்படவில்லை மேலும் மருத்துவர்கள் யாரும் ஒழுங்காக மலைக்கு வருவதில்லை, வந்தாலும் தங்குவதில்லை. எனவே மருத்துவர்களுக்குத் தங்கும் இடம் போன்ற வசதிகளை அங்கேயே செய்து கொடுத்து அவர்களை ஊக்குவிக்க வேண்டும்.

எங்கள்பகுதியில் 53 கிராமங்கள் உள்ளன ஒவ்வொரு கிராமத்திற்கும் இணைப்புச் சாலை எதுவும் இல்லாமல் நடை பாதை மட்டுமே உள்ளது. அந்தசாலை வசதிகளை செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அந்தப் பாதையில் பஸ் போக்குவரத்து செய்து கொடுக்க வேண்டுகிறேன்.

பச்சை மலைப்பகுதியை ஒரு சுற்றுலா தலமாக அறிவித்து அதற்கான பணிகளை மேற்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அரங்கராசன் கூறினார்.

## முதல்வர் டெல்லி செல்கிறார்

சென்னை, ஜூலை 26-முதல்வர் புரட்சித்தலைவர் நாளை டெல்லி செல்கிறார்

மத்திய அரசு கூட்டியுள்ள உணவு அமைச்சர்கள் மாநாட்டில் புரட்சித்தலைவர் கலந்துகொள்கிறார். நிதி, உணவு அமைச்சர் நாவலர், விவசாயத் துறை அமைச்சர் காளிமுத்து ஆகியோரும் உடன் செல்கின்றனர்.

விவசாய விளைபொருள் உற்பத்தி கழகம் சிபாரிசு செய்துள்ள விலைகளைப் பற்றி குறிப்பாக நெல்விலை பற்றி நாளைகூட்டத்தில் விவாதிக்கப்படும்"

(8-ம் பத்தி தொடர்ச்சி)

நேரம் விவாதம் நடந்த பின்புதான் ஒத்தி வைத்தேன். இது தான் தீர்ப்பு. தீர்ப்புதான். முடிந்த முடிவு,

இவ்வாறு சபாநாயகர் கூறினார்.

இதன் பிறகு டாக்டர் சவுரிராஜன் எழுந்திருந்து ஒருமானியம் முடிவுறாமல் இருக்கும் போது வேறொரு மானியக் கோரிக்கையை எடுக்கக் கூடாது என்ற விதி இருக்கிறதா என்று கேட்டார்.

இதன் பின்பு இ காங்கிரஸ் தலைவர் ஹாஜா ஷெரீபும் எழுந்து தங்கள் கட்சியும் வெளிநடப்பு செய்வதாகக் கூறினார்.

இ காங்கிரஸ் கட்சியினரும் வெளிநடப்பு செய்தனர்.

இந்தப் பிரச்சினையில்ஒரு மணி நேரம் சபையில் கூச்சல் குழப்பம், வாக்குவாதம் மோதல்கள் ஏற்பட்டன.

இதன் பிறகு சமூக நலத் துறை மானியக் கோரிக்கையை சபை எடுத்துக் கொண்டது,

## முதியோருக்கு உதவித் தொகை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒதுக்கி இருக்கிறது,

மருத்துவமனைகளுக்கு வேண்டிய கட்டு துணிகள் போர்வை போன்றவை உற்பத்தி செய்ய கூட்டுறவு நெசவு உற்பத்தி சங்கம் அமைக்கப்படும். பார்வையற்றவர்கள் இச் சங்கத்தில் சேர்க்கப்படுவார்கள்.

மதுரையில் ஊனமுற்றோர் தொழில் மற்றும் புனர்வாழ்வு நிலையம் தொடங்கும் திட்டம் அரசின் பரிசிலனையில் உள்ளது

## முதியோர் ஓய்வு ஊதிய திட்டம்

முதியோர் ஓய்வு ஊதிய திட்டத்தின் கீழ் சென்ற ஆண்டு மட்டும் 1 லட்சத்து 12 ஆயிரத்து 800 பேர் பயனடைந்துள்ளனர் நடப்பாண்டில் மேலும் 3 ஆயிரம் பேருக்கு உதவித் தொகை வழங்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் கோமதி சீனிவாசன் அறிவித்துள்ளார்.

# மசால் தொழிற்கூடம் மக்காசோளமாவு ஆலை வளர்ச்சி திட்டம்

### லியாகத் அலிகான் ஆலோசனை

சென்னை, ஜூலை. 26-மசால் தொழில் கூடம், மக்காச் சோளமாவு ஆலை ஆகியவற்றின் வளர்ச்சித் திட்டங்கள் பற்றி அதிகாரிகளுடன் வேளாண்மைத் தொழில் கழகத்தலைவர் கா லியாகத் அலிகான் ஆலோசனை நடத்தினார்.

தமிழ்நாடுவேளாண்மை தொழில்கழகத்தின் தலைவர் கா.லியாகத் அலிகான் கோவை, மதுரை மாவட்டங்களின் வேளாண்மைத் தொழில் கழகங்களின் மையங்களை பார்வையிடுவதற்காக சுற்றுப்பயணத்தினை மேற்கொண்டார், 18ந்தேதிகோவையிலுள்ள உதிரி பாகங்கள் விற்பனை நிலையத்தை பார்வையிட்டார்.

அங்குள்ள சிலகுறைபாடுகளை அலுவலர்களுக்கு சுட்டிக்காட்டி அதை நிவர்த்தி செய்யுமாறுகூறினார்.

பின்னர் உடுமலையிலுள்ள 'தாய்' நிறுவனத்திற்கு சொந்தமான "மக்காச் சோள மாவு", உற்பத்தி தொழிற்சாலை, மற்றும் மசால் தொழிற்கூடம் ஆகியவற்றை பார்வையிட்டார். அவற்றை மேலும் அபிவிருத்தி செய்வது குறித்து அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார்.

உடுமலை சுட்டல் மாரியம்மன் கோவில் அருகில் ஏற்பட்ட லாரி விபத்தில் காயம் அடைந்தவர்களுக்கு ஆறுதல் கூறினார். அவர்களுக்கு தேவையான வசதிகளை செய்து தருமாறு மருத்துவ அதிகாரிகளிடம் கேட்டுக்கொண்டார்.

மதுரைக்குச் சென்று டிராக்டர் வழங்கும் நிலையம் மற்றும் உதிரி பாகங்கள் நிலையம் ஆகியவற்றை பார்வையிட்டார். இந்த அமைப்புகளின் சிறப்பான பணிகள் குறித்து ஆலோசனை நடத்தினார், பின்னர் திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற 'யூனியன் வங்கி' திறப்பு விழாவில் தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர் காளிமுத்துவுடன் கலந்து கொண்டார்.

## திருவை அண்ணாமலை கழகத்தில் இணைந்தார்

சென்னை, ஜூலை 26-திமுகவின் முன்னணிப் பேச்சாளரும், இனமணி, கழகக்குரல், இனமுரசு ஆகிய பத்திரிகைகளை நீண்டகாலமாக நடத்தியவருமான திருவை அண்ணாமலை இன்று முதல்வர் புரட்சித்தலைவர் பொதுச் செயலாளர் ப உ ச ஆகியோர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்,

## கழகத் தோழர் மறைவு

சென்னை, ஜூலை, 26 நாமகிரிப் பேட்டை கழகத் தோழர் நாகரத்தினம் மறைவு எய்தினார். அவர் மறைவு குறித்து இரங்கல் கூட்டம் கே.பி. செல்வராஜ் தலைமையில நடைபெறறது அப்பகுதி அனைத்து கழக தொண்டர்களும் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

# ராஜா முகமது முன்னிலையில் கழகத்தில் இணைந்த 100 பேர்

திண்டுக்கல், ஜூலை 26 திண்டுக்கல் நாகல் நகர் அருகே வி மருதைராஜ் தலைமையில் மாவட்ட அண்ணா விவசாயப் பிரிவு சார்பில கழகப் பொதுக் கூட்டம் நடந்தது,

அமைச்சர் ராஜாமுகமது கே குப்புசாமி எல் எல் ஏ வேடசெந்தூர் வி பி பால சுப்பிரமணியம் எம் எல் ஏ முகாதார் திண்டுக்கல் சி. சீனிவாசன், டாக்டர் எம். நாகராசன் இ. சையது முகமது, மூர்த்தி, தியாக ராசமுருகன், ப. தங்க முத்து ஆகியோர்பேசினர்.

திண்டுக்கல் நகர் 19வது வட்ட திமுக செயலாளர் எஸ் எஸ் எஸ் ரசீதும் 75 திமுகவினரும் ராலபுரத்தைச் சேர்ந்த இந்திரா காங்கிரசைச் சேர்ந்த பிச்சை, திருவேங்கடம், காளிமுத்து ஆகியோர் உள்பட 25 பேரும் அமைச்சர் ராஜா முகமது முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

# தமிழக சட்டசபையில் தி.மு.க.ரகளை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

குப் போக வேண்டாம். எதிர்க்கட்சித்தலைவர் இங்கேயே இருக்க வேண்டும் என்பது தான் என் ஆசை. எல்லோரும் அதிக நேரம் பேச ஆசைப்பட்டார்கள் பெண்கள் பேச வேண்டும் என்று கேட்டதால் துணை சபாநாயகர் அனுமதித் தார்.

துணை சபாநாயகர் பி எச் பாண்டியன்: பேசுவதற்கு அதிக நேரம் கேட்டார்கள். ரகுமான்கான் 30 நிமிடம் கேட்டார். சுந்தரராஜன் 30 நிமிடம் கேட்டார், சரி என்று சொன்னேன். இது தாராளம் என்றால் இனி நான் குறைத்துக் கொள்கிறேன்.

கருணாநிதி: இதைக் காட்டி அச்சுறுத்துவது சரியில்லை.

ரகுமான்கான்: காவல் துறை மானியத்தை முடிக்காமல் வேறு மானியத்திற்குப் போக முடியாது என்ற சட்டப் பிரச்னை இருக்கிறது.

சபாநாயகர்: நேற்றே இதை நான் விளக்கமாகச் சொல்லியிருக்கிறேன் நாளை அலுவல் ஆய்வுக் குழுக் கூட்டத்தில் முடிவு எடுக்கப்படும் என்று சொல்லியுள்ளேன். ஆகவே சட்டப் பிரச்சினை இதில் வர வழியில்லை.

ரகுமான்கான்: அலுவல் ஆய்வுக்குழு எடுத்த முடிவை மாற்ற உங்களுக்கு அதிகாரமில்லை. கலந்து முடிவெடுத்திருக்க வேண்டும்.

சபாநாயகர்: கலந்துமுடிவெடுத்தது கிடையாதா?

கருணாநிதி: 200வது விதி மீறப்பட்டுள்ளதா? இல்லையா? அலுவல் ஆய்வுக்குழு கலந்து ஆலோசிக்கப் பட்டிருக்க வேண்டும் வரிசை முறை மாறக்கூடாது.

சுந்தர்ராஜன்:- வலிய அழைக்கவில்லை என்று சொன்னீர்கள் எங்கள் கட்சிப் பெண் உறுப்பினர் பேசுவதற்கு அனுமதி கேட்கவில்லை. வேறு ஒரு கட்சி பெண் உறுப்பினர் கேட்டார் அதையொட்டி எங்கள் கட்சிப்பெண் உறுப்பினரை அழைத்து பேசச் சொன்னது மரபா!

## தி. மு. க. கூச்சல்

பொன்னம்மாள்: இந்த அவையில் 4,5, பெண் உறுப்பினர்கள் தான் உள்ளனர் அதில் ஒருவர் அமைச்சர் மீதமுள்ள 3 பேர் அரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

எங்களுக்குஏற்பட்ட இன்னல்களை போலீஸ் செய்த கொடுமைகளைப் பற்றிப் பேசுவதற்கு அனுமதி தர வேண்டுமென கேட்டேன். எங்களுக்கு அனுமதி தந்தார்கள் இவைகளைச்சொல்லி சபை நடவடிக்கையைத் தடுத்து-

(அந்த நேரத்தில் திமுக உறுப்பினர்களும், காங்கிரஸ் உறுப்பினர்களும் பலத்த ஆட்சேபக் குரல்களை எழுப்பினார்கள் பல ஒழுங்குப் பிரச்சினைகளை எழுப்பினார்கள்.

சபையில் சிறிது நேரம் கூச்சல் எழுந்தது.)

## இந்திரா காங்கிரசில் மோதல்

சித்தன்: அரிசனங்கட்கு அவர்கள் தான் பிரதிநிதிபோல் பேசுகிறார்கள். எங்களுக்கும் அக்கறை இருக்கிறது.

இளையபெருமாள் (இ காங்): அரிசனநலத்துறை மானிய விவாதத்தில தலைவர்கள் பேசியபோது அரிஜனங்களுக்கு செய்யப்படும் கொடுமைகளை யாரும் எடுத்துச் சொல்லவில்லை. ஆகவே சித்தன் சொல்வதுசரியல்ல(பலத்த கைத்தட்டல்)

சித்தன்: மூத்த உறுப்பினர் இப்படி உணர்ச்சி வசப்பட்டுப் பேசக்கூடாது மாலைப் பத்திரிகைகளில் காங்கிரஸ் கட்சிக்குள் மோதல் என்று கொட்டை எழுத்துக்களில் வரும்.

(கைதட்டல்)

சபாநாயகர்: பிரச்சினை எங்கேயோ போகிறது அனைவரும் அமைதியாக இருங்கள்.

கருணாநிதி: 200 வது விதி மீறப்பட்டிருக்கிறதா இல்லையா என்று தான் நான் கேட்டிருக்கிறேன். இதில் யாருக்கு அதிக நேரம் என்று திசை திருப்பக்கூடாது.

ஹாஜாஷெரீப்:(இ.காங்கிரஸ்) பிரச்சினை மிக எளிதானது நேற்று முடிவடையாத ஒரு மானியக் கோரிக்கை தானகவே இன்று வரவேண்டும் அல்லது வேறு ஒரு நாளில் வரவேண்டும்.

டாக்டர் சவுரிராஜன் (கா கா தே கா):

## இதுவே முறை

அலுவல் ஆய்வுக்குழு முடிவுப்படித்தான் இன்று சமூகநல மானியம் எடுக்கப்படுகிறது. நேற்று முடிவடையாத மானியத்தைப்பற்றி பேசுவதற்கு அலுவல் ஆய்வுக் குழு கூடி முடிவெடுக்கும் என்பது தானே முறை?

(பலத்த கைதட்டல்)

கருணாநிதி: இப்படித்தான் சபை நடக்க வேண்டுமென்று ஆளுங்கட்சி விரும்பினால் நாங்களும் அப்படிச் செய்வதற்குஅனுமதி தருவீர்களா?

(திமுகவினர் மேஜையைத் தட்டி அப்போது சப்தம் எழுப்பினர்.

அலுவல் ஆய்வுக்குழு மதிக்கப்படவில்லை நேற்று 12மணிக்கு அலுவல் ஆய்வுக்குழுவைக் கூட்டிமுடிவு எடுத்திருக்கலாம்.

சபாநாயகர்:- இன்று அலுவல்ஆய்வுக்குழு கூடுகிறது அலுவல்ஆய்வுக்குழு கூடாத நேரத்தில் முடிவு எடுக்கிறபொறுப்பு அவைத்தலைவருக்கு இருக்கிறது அலுவல் ஆய்வுக் குழுவை அவமானப்படுத்துமஎண்ணம் கிடையாது.

நெல்லிக்குப்பம்கிருஷ்ணமூர்த்தி (திமுக): போலீஸ் மான்யத்தை இன்று எடுத்திருக்க வேண்டியதுதானே முறை?

சபாநாயகர்: இன்று கூடும் அலுவல் ஆய்வுக் குழு அதற்கான நேரத்தை முடிவு செய்யும் என்று நான் சொல்லி இருக்கிறேனே இன்று 12 மணிக்கு அலுவல் ஆய்வுக்குழு கூட்டப்பட்டிருக்கிறது நேற்று ஏற்பட்ட சூழ்நிலையையொட்டி ஒன்றரை மணிக்கு சபை ஒத்தி வைக்கப்பட்டது.

ரகுமான்கான்: 200வது விதியை மீறும் அந்த அதிகாரம் உங்களுக்கு இல்லை?

சபாநாயகர்:- 318வது விதியில் அந்த அதிகாரம் இருக்கிறது.

நெல்லிக்குப்பம்கிருஷ்ணமூர்த்தி:- அலுவல் ஆய்வுக்குழுவினுடைய முடிவின்படி காவல்துறை மானியம் முடியாமல் வேறு மானியத்திற்கு வரக்கூடாது.

கருணாநிதி: விதிகளில் குறிப்பிடப்படாமல் இருந்தால் என்றுதான் 312ல் சொல்லப்பட்டுள்ளது.

ஆனால், விதி200லகுறிப்பிடப்பட்டுள்ளது.

சபாநாயகர்: அலுவல் ஆய்வுக்குழு முடிவுப்படிதான் சபை நடக்கிறது நேற்று முடிவடையாத பிரச்சினையைப்பற்றி இன்று அந்தக் குழு முடிவெடுக்கும் நேற்று கூடுவதற்கு நேரமில்லை நீங்களும் இல்லை.

அமைச்சர் பண்ருட்டி: நேற்று எதிர்பாராத சூழ்நிலை ஏற்பட்டது,

நேற்று முடிவடையாத போலீஸ் மான்யத்தை இன்று வைத்திருந்தால் தான் அது பிரச்சினையாகி இருந்திருக்கும் அலுவல் ஆய்வுக்குழுவைக் கலந்து செய்யப்படும்என்றுசொன்னது முற்றிலும் பொருத்தமானது தான்.

டாக்டர்நாவலர்:-இன்று நடப்பதற்கான அஜண்டா நேற்றே தரப்பட்டிருக்கிறது. அதன்படி இன்று மானியக் கோரிக்கை எடுக்கப்படுகிறது. முடிவு எடுப்பதற்கு தங்களுக்கு உரிமை இருக்கிறது.

இந்த கட்டத்தில் ஒரு விளக்கம் கொடுக்க அமைச்சர் திருநாவுக்கரசு எழுந்தார் அப்போது கருணாநிதியும் எழுந்து நின்றார் திமுகஉறுப்பினர்களும் காங்கிரஸ் உறுப்பினர்களும் "உட்கார் உட்கார்" என்றுஅமைச்சர்திருநாவுக்கரசைப்பார்த்து சப்தமிட்டனர். அவர்கள் பலர் எழுந்து நின்று ஏதேதோ பேசினார்கள்,

திமுக உறுப்பினர் ரகுமான்கான் அவருடைய இடத்தை விட்டு முன் வரிசையை நோக்கிச்சென்றார் சபையில்கூச்சலும் குழப்பமும் எழுந்தது

ரகுமான்கானை அவருடைய இடத்திற்குப் போகுமாறு சபாநாயகர் கூறினார்.

தொடர்ந்து சபையில் கூச்சல் வாக்குவாதங்கள் நடந்தன.

சபாநாயகர் உறுப்பினர்களை அமைதிப்படுத்த முயற்சித்தார்.

அவை முன்னவர் நாவலர் எழுந்து யாரும் இதற்காக கூச்சல் போட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்,

கருணாநிதி எழுந்து மீண்டும் விதிகளை சுட்டிக் காட்டி பேசிக் கொண்டிருக்கும் போது ஆளுங்கட்சி நடவடிக்கையைக் கண்டித்து தாங்கள் வெளி நடப்பு செய்வதாகக் கூறிவிட்டு வெளிநடப்பு செய்தார் வெளியே போய்க் கொண்டிருந்த திமுக உறுப்பினர்கள் தரக்குறைவான வார்த்தைகளைப் பயன்படுத்தி திட்டியவாறு சென்றனர்.

சிலர் தங்கள் கையில் இருந்தபுத்தகங்களைசபைக்குள் விட்டெறிந்தனர்,

## படார் படார்

மேஜை பலகையை "படார் படார்" என்று அடித்தனர்.

திமுக உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்ததும் இ காங்கிரஸ் உறுப்பினர்கள் பலர் எழுந்து நின்று அவர்களுடைய துணைத் தலைவரை பார்த்து, சுந்தர்ராஜன் சுந்தர்ராஜன் என்றழைத் தார்கள்

காங்கிரஸ் கட்சித் தலைவர் ஹாஜா ஷெரீப் சபாநாயகரிடம் சென்று ஏதோ கேட்டார்

எழுப்பப்பட்ட ஒழுங்குப் பிரச்சினைகளுக்குத் தீர்ப்பளித்து இறுதியில் சபாநாயகர் கூறியதாவது:-

நேற்று அலுவல் ஆய்வுக் குழுவைக் கூட்ட நேரமில்லை அதனுடைய மதிப்பைக் குறைக்கும் எண்ணமும் கிடையாது. இன்று அலுவல் ஆய்வுக் குழு கூடி முடிவெடுக்கும் என்றுதான் சொல்லியிருக்கிறேன்.

அலுவல் ஆய்வுக் குழு கூடாத நேரத்தில் முடிவு எடுக்க எனக்கு உரிமை இருக்கிறது. என் உரிமை பறிக்கப்படவில்லை,

நாலரை மணி

(4-ம் பத்திப் பார்க்க)

# கட்டாய கொள்முதல் இல்லாத கழக அரசு

## ஆனூர் ஜெகதீசன் பேச்சு

சென்னை, ஜூலை 26- புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் விவசாயிகளிடம் கட்டாய கொள்முதல் செய்யப்படவில்லை என்று ஆனூர் ஜெகதீசன் கூறினார்.

உணவுத்துறை மானியக் கோரிக்கை விவாதத்தில் பேசும்போது ஆனூர்ஜெகதீசன் பேசியதாவது:-

புரட்சித் தலைவருடைய மூன்று ஆண்டு கால ஆட்சியில் தமிழகத்தில் அரிசிக்குப் பஞ்சமில்லை அரிசியின் விலையும் ஒரே சீராக இருக்கிறது. காங்கிரஸ் ஆட்சி காலத்தில் அரிசி பஞ்சம் தமிழகத்தை அலைக்கழித்தது. 74-75ம் ஆண்டில் திமுக ஆட்சியிலும் அரிசிப் பஞ்சம் தலை தூக்கியது.

கிராமப்புற ஏழை-தாழ்த்தப்பட்ட மக்கள் கடலைப் புண்ணாக்குத் தின்றனர். வள்ளிக்கிழங்கையும் புளியங் கொட்டையையும் மாவாக்கி சாப்பிட்டனர். அந்த நேரத்தில் "எலிக்கறி சத்துணவு: ஆகவே எலிக்கறி சாப்பிடலாம்" என்றுகூட ஒருவர் சொன்னார்.

## சீரான விலை

புரட்சித்தலைவர் ஆட்சியில் இப்படிப்பட்ட நிலை எதுவும் இல்லை,

எந்த நேரத்திலும் எந்த இடத்திலும தமிழகத்தில் அரிசி சீரான விலையில் கிடைத்து வருகிறது.

முந்தைய ஆட்சி காலத்தில் வீடு புகுந்து கொள்ளையடித்தது போல கட்டாயக் கொள்முதல நடத்தது பூஜை அறையிலும் படுக்கை அறையிலும் கூட சோதனை போட்டார்கள்

புரட்சித்தலைவர் ஆட்சியில்கட்டாயக்கொள்முதல் இல்லை. புரட்சித்தலைவர் ஆட்சி சிறப்பான சாதனை புரிந்துவருகிறது.

இவ்வாறு ஆனூர் ஜெகதீசன் பேசினார்.

## புலவர் அறிவுடைநம்பி நிகழ்ச்சிகள்

ஜூலை 27- பெங்களூர் (கழகப் பொதுக் கூட்டம்) 29-சென்னை 8 வது வட்டம்.

ஆகஸ்ட் 1- அனகாபுத்தூர் (இராமலிங்கம் எம் எல் சி பாராட்டு விழா) 2- திருச்சி வடக்கு தாரா நல்லூர், 3- குடந்தை 22வதுவட்டம், 4-வேலூர் (சேலம்) 5- சென்னை இராயபுரம் 13வது வட்டம்.

முகவரி:
புலவர் அறிவுடைநம்பி
அம்புசம் இல்லம்,
மனை எண் 92, ஏ.ஐ.பிளாக்,
அண்ணாநகர்-
சென்னை-600040.

### பேச்சாளர் முகவரி

பாவலர் பணி
டாக்டர் கே எம் ஏ வஹாப்
ஏ 24 எச் எம் ஆஸ்பத்திரி
அண்ணாநகர்
செங்கை-603001

## கொலை, கொள்ளை வழக்குகளைக் கண்டுபிடிப்பதில்

# காவல் துறையின் தீவிர பணி

## சட்டசபையில் உறுப்பினர்கள் பாராட்டு

**சென்னை, ஜூலை. 26-கொலை, கொள்ளை போன்ற வழக்குகளைக் கண்டுபிடிப்பதில் காவல்துறை தீவிரமாகப் பணியாற்றுவதாக சட்டமன்றத்தில் கழக உறுப்பினர்கள் பாராட்டினார்கள்.**

### வெள்ளைச்சாமி

காவல்துறை மானியக் கோரிக்கைமீதான விவாதத்தில் கலந்துகொண்டு கழக உறுப்பினர் ஆ. வெள்ளைச்சாமி பேசுகையில் கூறியதாவது:

சமுதாயத்தில் குற்றங்கள் நிகழ்வது இன்றைக்குச் சர்வ சாதாரணமாக இருந்து வருகிறது. இந்தக் குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கு-அந்தக் குற்றங்கள் நிகழாமல் பார்த்து கொள்வதற்கு போலீஸ் துறை தீவிரமாக செயலாற்றி வருகிறது.

அதை விட்டுவிட்டு சமுதாயத்தில் இருக்கும் சமூக விரோத சக்திகளால் ஏற்படும் காரியங்களை இங்கேபெரிதுபடுத்திக் காட்டுகிற காரணத்தாலே-அதை அவர்களைச் சார்ந்த பத்திரிகைகள் பெரிதுபடுத்துவதால்-இந்த அரசுக்குக் களங்கம் வந்துவிடாது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய தினம் சமுதாயத்தல் பல்வேறு குற்றங்கள் செய்கின்ற தீய சக்திகள் இருக்கின்றன. அந்த சக்திகளை எல்லாம் கண்காணிக்க வேண்டும் அந்தச் சக்திகள் எல்லாம் குற்றங்கள் புரிவதிலிருந்து தடுக்கவேண்டும் என்றால் நாம் அத்தனைபேரும் இந்த நாட்டுக் குடிமக்கள் என்ற என்ற உணர்வோடு நம்முடைய கடமையை எண்ணி அந்தப் பணியில்நாம்முனைப்போடு செயல்பட வேண்டும். காவல்துறையை மட்டும் நம்பி இருக்கக்கூடாது.

காவல் துறைஎன்பதுகுற்றங்கள்நடக்காமலபார்கக வேண்டுமானால் இன்னும் காவல் துறைக்குப் பல கோடி ரூபாய் செலவழிக்க வேண்டிய அவசியத்திற்கு இந்த மாநிலம் தள்ளப்படும் என்பதைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

அதே நேரத்தில் இன்றையதினம் குற்றங்கள் அதிகரிப்பதற்குக்காரணம நம்முடைய நாட்டில்இருக்கிற இந்தியன்பினல்கோடு சட்டம்தான் ஒருவர் கொலை செய்தார் என்று வைத்துக் கொள்வோம அவர்தான் கொலை செய்தார் என்று எல்லோருக்கும் தெரியும்இருந்தாலும் சட்டத்தின்பிடி யிலிருந்து அவர் தப்பித்துக்கொள்கின்ற சூழ்நிலை இருக்கிறது.

காரணம் 'ஐ விட்னஸ்' இல்லை என்று சொல்லிவிடுகிறார்கள். சமுதாயத்தில் அவர்தான் கொலை செய்தார் என்று தெரிந்திருந்தாலும் சட்டப்படி நிரூபிக்க முடியாததால் தப்பித்துவிடுகிறார். ஆகவே இந்தியன் பினல்கோடுசட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கிராமகமிட்டி அமைத்து அந்தக் கமிட்டியின் மூலம் கிராமத்தில் இருக்கிற ஒவ்வொருவரும் மதுவிலக்குச் சட்டத்தை செயல்படுத்துவதில் தீவிரமாக கடமையாற்ற வேண்டும். இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான சூழ்நிலைகளை உருவாக்கவேண்டும் என்று நம்முடைய அரசை கேட்டுக்கொள்கிறேன்.

அதேநேரத்தில் மதுவிலக்கை செயல்படுத்தும் காவல் துறையினரின் எண்ணிக்கை மிகவுமகுறைவாக இருக்கிறது. இதை அதிகப்படுத்த வேண்டும். முதல்வர் புரட்சித்தலைவர் 10,000 காவலர்களை புதிதாக நியமிக்க இருப்பதாகக் கூறியிருக்கிறார்கள். இவர்களை விரைவிலே நியமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு வெள்ளைச்சாமி கூறினார்.

காவல்துறை மானியக் கோரிக்கையில் கலந்து கொண்டு டாக்டர் கே சமரசம (கழகம்) பேசுகையில் கூறியதாவது:

பேரறிஞர் அண்ணா அவர்கள் ஸ்டார்ட்செய்து ஓட்டிக்கொண்டிருந்த சகலமும் உள்ளவண்டியை கலைஞர் ஜாம்பமாக ஓட்டி விபத்துக்குள்ளாக்கிய வண்டியை, பெல், பிரேக் இல்லாத வண்டியை, பழுதான இயந்திரமாய், ஓடாத வண்டியை ஓட்டியவர், ஓட்டிக் காட்டுபவர் புரட்சித்தலைவர் அவர்கள் ஆவார்கள்,

இதை எண்ணித் தான் பேரறிஞர் அண்ணா அவர்கள் அன்றைய தினம்புரட்சித்தலைவர் அவர்களிடம் ஒரு ஸ்பேனரைக் கொடுத்தார்கள். அதைக்கூட இன்றைய தினம் தொழிலாளர் கொடியிலே இணைத்திருக்கிறோம் என்பதை நான் இந்த நேரத்திலே சொல்லிக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.

### சமுதாய மறுமலர்ச்சி

நேர்மாறான சமுதாய உணர்வுகளைஒருங்கிணைத்து சமுதாய மறுமலர்ச்சிகாக இயக்கப்படுவதே நிர்வாகத்தின் திறமையாகும் என்று சொன்ன கருத்துக்கேற்ப மிகச் சிறப்பான ஒரு ஆட்சி முறையை இன்றையதினம் அண்ணா தி. மு. கழகம் நடத்துக் கொண்டிருக்கிறது.

கழகத்திற்குத் தலைவர் இல்லையென்று சொன்னார்

அண்ணா அண்ணா தி மு க. வும் அப்படியே இருநகது இருக்கிறது பேரறிஞர் அண்ணா இரு மொழிக் கொள்கையை வகுத்தார். அதனை எங்கள் இதயக் கனியாம் புரட்சித்தலைவர் அமுலாக்கிக் கொண்டிருக்கிறார். மாநிலத்தில்சுயாட்சித்தன்மை - இது அண்ணா கண்ட கனவு, அதுவே எங்களுடையலட்சியம், அரிசன மக்கள் தனிமைப்படுத்தப் படக்கூடாது. அந்தத் அந்தத் திருக்குலத்தினர் உயர கூட்டமைப்புத் திட்டத்தை நாம் உருவாக்கிக் காட்டியிருக்கிறோம்.

ஜாதிகள் கூடாது என்று பேரறிஞர் அண்ணா, பெரியார், காந்தி எல்லாம் சொன்னார்கள் அதனை நிறைவேற்றுவதற்காகவே செயலாற்றுவதற் காகவே பொருளாதார அடிப்படையில் ஒதுக்கீடுகள் திட்டங்கள் தேவை என்று புதிய தத்துவத்தைக் கொண்டு வந்து சட்டத்தைக் கொண்டு வந்தோம்.

இது அண்ணாவின் அரசு என்று நாங்கள் சொல்ல் அண்ணாவின் கொள்கைகளை நாங்கள் அமலாக்குகிறோம். இது அண்ணா அவர்கள் கொடுத்த நிலந்தான்; அண்ணா அவாகள் பாய்ச்சிய நீர்தான், அண்ணா அவர்கள் காட்டிய உழவுதான், அண்ணா அவர்கள் தந்த விதைதான், அண்ணா அவர்கள் கொடுத்த எருதான், அண்ணா அவர்கள் கொடுத்த மருந்துதான் எல்லாம் இருந்தும் கதிரும் பதரும் எவ்வாறு வந்தது? ஆனால் களத்திலே எடுத்து அடித்துப் பார்க்கிறபோது பிரிக்கிறபோது-பொதுமக்கள் மத்தியிலே நாங்கள் கதிராகவும்-நெல்மணியாகவும், நீங்கள் பதராகவும் ஆனீர்கள்என்பதைமறந்து விட முடியாது.

### அண்ணாவின் ஆட்சி

ஆகவே அந்த அடிப்படையிலே இந்த ஆட்சி அண்ணாவின் தொடர் ஆட்சியாக ஆட்சியை நிர்வகித்து வருகிறது என்பதைத்தெளிவாகத்தெரிந்து கொள்ளவேண்டும், நிர்வாகம் சீரழிக்கப்படுகிறது என்றாலும் அல்லது ஒரு ஆட்சி மாற்றப்படுகிறது என்று சொன்னாலும் உலகத்திலே பல அரசுகள்கவிழ்வதற்கு, பல வீனமடைவதற்கு மாறுவதற்கு பல காரணங்கள் இருந்திருக்கின்றன அமெரிக்காவில்வாட்டர்கேட், ஜப்பானில்லாக்கீடு இங்கிலாந்தில் புரபியுமா கிலர் விவகாரம் காரணமாக பதவி இழந்தனர். ஆனால்இந்திய துணைக்கண்டத்திலே பல மாநிலங்களில் பல கஷ்டங்கள் காரணமாக இருந்தாலும் புரட்சித்தலைவர் ஆட்சிதான் எந்தவிதமான பிரச்சினையும் இல்லாமல் எந்த விதமான கமிஷனும் இல்லாமல் எந்தவிதமான்புகாரும் இல்லாமல் ஆட்சி கலைக்கப்பட்டது சதிகாரர்கள் இணைந்து புதுக் கணக்கு போட்டார்கள்.

இன்றைய தினம் இவர் போட்ட கணக்கொன்று, அவர் போட்ட கணக்கொன்று இரண்டுமே தவறானது. மக்கள் போட்ட கணக்கிற்கே இருவரும் பலியாகி நின்றதே முடிவானது தமிழ் மண்ணுக்கே பொதுவானது புரட்சித்தலைவரே முதல்வர் என்றானது. என்ற முறையில்இன்றைய தினம் நாம் ஆட்சி செய்து கொண்டிருக்கிறோம்.

இவ்வாறு டாக்டர் சமரசம் பேசினார்.

---

## சென்னை மாநில பொதுத் தொழிலாளர் சங்க மாநாடு

சென்னை, ஜூலை 25- சென்னை மாநில பொதுத் தொழிலாளர் சங்கத்தின் 17-வது சிறப்பு மாநாடு இம்மாதம் 27-ந் தேதி (ஞாயிற்றுக்கிழமை) காலை 9 மணி அளவில் பூந்தமல்லி நெடுஞ்சாலையில் உள்ள கேரள சமாஜம் மண்டபத்தில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் என் சங்கரய்யா எம் எல் ஏ வி பி சிந்தன், கே எம் ஹரிபட், பி ஜி கே கிருஷ்ணன், மைதிலி சிவராமன் எஸ் டி சண்முகம் ஆகியோர் கலந்துகொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

---



---

பஉச முன்னிலையில்

## கழகத்தில் இணைந்த தி.மு.க.வினர்

சென்னை, ஜூலை. 26- சென்னை 125-வது வட்டம் கருணாநிதி படிப்பகத்தின் செயலாளர் விஜயகுமார், ரவிச்சந்திரன், பிரபாகரன் ஆகியோர் திமுகவிலிருந்து விலகி கழகப் பொதுச் செயலாளர் ப உ ச. முன்னிலையில் முன்னாள் எம் எல் ஏ இராமசாமி தலைமையில் கழகத்தில் இணைந்தனர்.

## சிறுகடை வியாபாரிகள சங்கம்

சென்னை, ஜூலை 26- சென்னைமாவட்ட அண்ணா சிறுகடை வியாபாரிகள் சங்க நிர்வாகிகள்தேர்தல் சென்னைமாவட்ட அண்ணா தொழிற் சங்க பொறுப்பாளர் சா கணேசன் தலைமையில், நடந்தது.

சா. கணேசன் சிறப்புத் தலைவராகவும் க.மோகன் தலைவராகவும், ஆர் கோபால கிருஷ்ணன் பொதுச் செயலாளராகவும், மு மகராசன் பொருளாளராகவும், க. எல்லப்பன்சி.வி பாலன் துணைத்தலைவர்களாகவும் இரா கிருஷ்ணன். ச. சந்திரன் துணைச்செயலாளர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

---

## 800 தொழிலாளர்பயன் பெறுவர்:

# எம்எப்எல் ஊழியருக்கு ரூ.30 சம்பளம் உயர்வு: கழக முயற்சி வெற்றி

**சென்னை, ஜூலை.26 எம்.எப்.எல். பாரத் டிரான்ஸ்போர்ட் நிர்வாகத்திடம் வை.பெருமாளும் சா.கணேசனும் அண்ணா தொழிற்சங்கத்தின்சார்பில்நடத்தியபேச்சுவார்த்தையில் தொழிலாளர்களுக்கு 210 ரூபாயாகஇருந்த சம்பளம் 240 ரூபாயாக உயர்த்தப்பட்டுள்ளது.**

எம். எப். எல். பாரத் டிரான்ஸ்போர்ட் நிர்வாகத்திடம் கழகத் தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளர் வை. பெருமாளும், அண்ணா தொழிலாளர்சங்கப் பேரவையின் சென்னை மாவட்டப் பொறுப்பாளர் சா. கணேசனும் பேச்சுவார்த்தை நடத்தினார்கள்.

இந்தப்பேச்சுவார்த்தைகள் தொடர்பாக நிர்வாகம் தொழிலாளர்களின் கீழ்க்கண்ட கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டுள்ளது.

இதுவரையில் 9 நாட்களாக கொடுக்கப்பட்ட பண்டிகை விடுமுறைகள் 11 நாட்களாக மாற்றப் பட்டுள்ளது.

மாதம் ரூ 210 என்று இருந்த சம்பளம் ரூ 240 ஆக உயர்த்திக் கொடுக்கப்படும்.

வருடம் ஒன்றுக்கு 2 டவலும், ஒரு வேட்டியும் வழங்கப்படும்.

ஒரு மாதத்திற்கு ஒரு தொழிலாளிக்கு வாசனை சோப்பு ஒன்று வழங்கப் படும்.

இவைகள் அனைத்தும் 1-7-80 முதல்அமுல்படுத்த நிர்வாகம ஒப்புதல் அளித்துள்ளது

இந்த நிறுவனத்தில்பணியாற்றும் 800 தொழிலாளர்களும பேச்சுவார்த்தை நடத்தி கோரிக்கைகளை நிறைவேற்றச் செய்த வை. பெருமாளுக்கும், சா. கணேசனுக்கும் நன்றிதெரிவித்துக் கொண்டுள்ளனர்.

மருத்துவமனையில்

## கே.எஸ்.மணி: கே.ஏ.கே. பார்த்தார்

சென்னை, ஜூலை 26- உடல் நலக் குறைவு காரணமாக ராயபேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டுள்ள கே.எஸ். மணியை அமைச்சர் கே ஏ. கே. பார்த்து நலம் விசாரித்தார். அவருடன் த. சதானந்தம், பார்த்தசாரதி ஆகியோரும் சென்று பார்த்தனர்.

---



---

# பிஸ்கட் பெட்டியை கண்டு மிரண்ட திமுக. எம்.எல்.ஏ.

சென்னை, ஜூலை 26- சட்டசபையில் தி. மு. க. பகுதியில் மூடிய அட்டைப் பெட்டி ஒன்று இருநகது. பொன்னுரங்கம் (தி.மு.க.) அட்டைப் பெட்டியை கையில் எடுத்துக்கொண்டு ஒழுங்குபிரச்னை எழுப்பினார் முக்கியமான மானிய கோரிக்கையான போலீஸ் மானிய கோரிக்கை மீது விவாதம்நடக்கிறது. இங்கே இந்த பெட்டி இருக்கிறது இது டைம் பாமாக (வெடிகுண்டாக) இருக்குமோ என்று சந்தேகம ஏற்படுகிறது என்றார்.

துணை சபாநாயகர் பாண்டியன் அதைகொடுங்கள் பார்க்கலாம் என்றார். அப்போது தான் அந்த இடத்துக்கு வந்த புருஷோத்தமன் இது பிஸ்கட் பாக்கெட் என்றார்.

இதைத் தொடர்ந்து சபையில் பலத்த சிரிப்பு எழுந்தது.

# அண்ணா




# ஜாதிக் கலவரத்தை தூண்டுவதா? திருப்பூர் மணிமாறன் கண்டனம்

**சென்னை, ஜுலை 26- ஜாதிக் கலவரங்களைத் தூண்டும் வகையில் பேசுவோர் மீதும், எழுதுவோர் மீதும் தயவுதாட்சண்யமின்றி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சட்டசபையில் திருப்பூர் மணிமாறன் கூறினார்.**

காவல்துறை மான்யக் கோரிக்கை மீது சட்டப்பேரவையில் கொறடா திருப்பூர் மணிமாறன் பேசும்போது கூறியதாவது:-

பிரச்னைகளுக்கு ஆளாவதும் பிரச்னைகளை தீர்த்து வைப்பதும் காவல்துறையின் தலையாயகடமையாக யார் ஆட்சிக்கு வந்தாலும் கருதப்பட்டு வருகிறது.

ஒழுக்கம், அமைதி ஏற்படுத்துவதில் காவல் துறைக்கு பெரும் பங்கு உண்டு.

ஆளுங்கட்சிக் காரர்கள் கைதட்டிய போது எந்தப் பள்ளிக் கூடத்தில் படித்தார்கள் என்று எதிர்கட்சிஉறுப்பினர் கேட்டார்.

நாங்கள் தலை தட்டுகிற பள்ளிக் கூடத்தில் படிக்கவில்லை. அந்த உறுப்பினர் கூட எங்கள் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து பார்த்தார்; சேர முடியவில்லை.

(பம்மல் நல்லதம்பி எழுந்து ஏதோசொன்னார்)

## அதிர்ச்சி அனுபவம்

ஜாதி கலவரம், இனக் கலவரம் எழுந்தபோது, திருடர்களை கைது செய்ய எத்தனித்தபோது, பயங்கரமான கத்திக்குத்துப் பட்டு கொலைக்கு ஆளாகி இறந்துபோன காவலர்களுக்கு என்னுடைய அஞ்சலியை அனைத்திந்திய அண்ணா திமுக சார்பில் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதிர்ச்சிகள் அனுபவங்களை உண்டாக்குகிறது. அந்த அனுபவங்கள் அதிர்ச்சிகளை சமாளிக்கிறது.

1972ல் புரட்சித்தலைவர் விலக்கப்பட்டபோது புதிய எழுச்சி ஏற்பட்டதைதமிழ் சமுதாயம் எப்போதும் மறக்காது.

ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி அண்ணா திமுகழகம் குழந்தையாகதொட்டிலில் கிடந்த போது பல்வேறு வழக்குகள் போடப்பட்டன 25ஆயிரம் வழக்குகள் போட்டனர்,

அந்த நிகழ்ச்சிகளை நிழல் படமாக எடுத்துச் சொல்வது என்னுடைய கடமையாகும்.

சட்டமன்ற உறுப்பினர் தாமரைக்கனி, அமைச்சராக இருக்கும் குழந்தைவேலு, இன்னும் ஒருபடி மேலே புரட்சித்தலைவர் வரை பொய் வழக்குகள் போடப்பட்டன,

அந்த அதிர்ச்சிகளை அண்ணா தி. மு. கழகம் தனது இதயத்தில் பசுமையாக பதிய வைத்துக் கொண்டது.

அன்றைய தினம் காவல் துறையை அடிப்படையாக வைத்துதான் கோர தாண்டவம் ஆடினார்கள்.

அண்ணா திமு கழகம் ஆட்சிபீடம் ஏறிய 3 ஆண்டு காலத்தில் உருவாக்கப்பட்டபோராட்டம் கணக்கில் அடங்காது அது வன்முறையால் தூண்டி விடப்பட்டதாக சொல்லவில்லை. தூண்டிவிடப்பட்டிருக்கலாம் என்று சொல்லுவதில் தவறிருக்காது.

## 3மாத விபரீதம்

திடீரென்று ஆட்சி கலைப்பு ஏற்பட்டது பிறகு 3 மாதகாலங்களில் எத்தனை விபரீதங்கள் ஏற்பட்டன? எப்படிப்பட்ட விளையாட்டுக்கள்?

ஆட்சி கலைக்கப்பட்ட மறுநாள் 18ந்தேதி காலை என்னுடைய திருப்பூருக்கு போகிறபோது ஏற்பட்ட சம்பவங்கள் எத்தனை?

அனைத்திந்திய அண்ணா தி மு கழக நகர அலுவலகத்தில் போலீசார் புடை சூழ்ந்துநிற்கிறார்கள் நான் எல்லா போலீசாரையும் சொல்லவில்லை. அதில் மனிதாபிமானம் உள்ளவர்களும் இருக்கிறார்கள்.

அங்கே சப்-இன்ஸ்பெக்டர் ஒருவர் உள்ளே நுழைந்து கட்சி அலுவலகத்திலிருந்த பழனிசாமி என்பவரை அடித்தார், புரட்சித்தலைவரின் படம் அடித்து நொறுக்கப்பட்டது, போன், மேஜை நாற்காலிகள் அடித்து நொறுக்கப்பட்டன, அந்த இடமே ரணகளமாக்கப்பட்டது.

உங்கள் ஆட்சி கவிழ்க்கப்பட்டு விட்டது. இனி வரப்போவது நாங்கள் தான்' என்று அந்த அதிகாரி சொல்லி இருக்கிறார். ஒரு அதிகாரி அப்படிச் சொல்லலாமா?

எங்கள் கட்சி அலுவலகம் மட்டுமல்ல. இந்திய கம்யூனிஸ்டு கட்சி அலுவலகம், மார்க்சிஸ்டு கட்சி அலுவலகமும் அடித்து நொறுக்கப்பட்டன,

குனியமுத்தூரிலும் அதே நிலைதான் எம ஜி ஆர் மன்றம் தாக்கப்பட்டது.

தேர்தலின் போது மதுராந்தகத்தில் நடைபெற்றது போல 3மாதத்தில் நடந்த அடுக்கடுக்கான சம்பவங்கள் எங்கள் ஆட்சிக்கு அனுபவங்களைக் கற்றுத் தந்திருக்கின்றன.

எப்படிப்பட்ட அதிர்ச்சி வந்தாலும் அந்த அனுபவங்கள் கைகொடுக்கும்.

## ஜாதி உணர்வு வரலாமா?

ஜாதி பிரச்சினை தலை தூக்கி ஆடுவது தேர்தலுக்குப் பிறகுதான் என்பதை மறக்கக் கூடாது.

பார்ப்பன எதிர்ப்புகுரல் தமிழகம் முழுவதும் எதிரொலிக்கிறது. இந்த ஜாதி உணர்வுகள் வளரலாமா? இதெல்லாம் காவல்துறையினருக்கு புலப்படவில்லையா?

ஒரு பத்திரிக்கையிலே ',கோவிலில் மணியாட்டி கெடுத்த கும்பலே வெளியேவா என்று எழுதியிருக்கிறது. அதுமட்டுமல்ல ஒழிப்போம், ஒழிப்போம் பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிப்போம் என்றும்எழுதியிருக்கிறது.

'கட்டையிலே கோடாரி வெட்டு ஒரே இடத்தில் விழவேண்டும் வெட்டுத் தவறினல் கட்டை உடையாது' வறகுக்கு ஆகாது 'எல்லோரும் பார்ப்பனரை ஒரே இடத்தில் வெட்டுவோம்' என்றும் எழுதியிருக்கிறது.

நடந்து முடிந்த தேர்தல் முடிவுகளை, கோயதாபங்களை வைத்து எழுதியிருக்கிறார்கள்.

ஒரு டி. ஆர். ஆர் ஒரு துக்ளக் 'சோ'வை வைத்து அந்த சமுதாயத்தை எடை போட வேண்டுமா?

டி ஆர் ஆரின் பேனா முனை வேலாயுதமாக குத்தினல் அதற்கு நாங்கள் எப்படி பொறுப்பு? டி ஆர் ஆரின் எழுத்து ஹைட்ரஜன் குண்டுபோல வெடிக்கலாம். அதனை தாக்குப்பிடிக்க முடியாதவர்கள் எப்படி அரசியலில் இருக்கலாம்?

ஜாதி பிரச்சினைதொடர் நாவலாக இருக்கவேண்டுமா? ஜாதி கலவரத்தில் அரசியல் காற்று வீசத்தான் போகிறதா?

காவல்துறையினர் ஜாதி கலவரத்தில் யார் ஆலவட்டம் வீசினலும் அவர்களை சிறைகோட்டத்திலே அடக்கி வைக்கவேண்டும்.

புரட்சித்தலைவர் தான் போலீசார் இந்த நாட்டில் சங்கம் வைத்துக் கொள்ள அனுமதி தந்தார். 129 ஆண்டு வரலாற்றை அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் காவல்துறை பல்வேறு மாறுதல்களைச் செய்து வருகிறது.

## உண்மை வெளியில்!

உண்மை ஊருக்கு வெளியே நிற்கிறது தர்மம் தலைவிரிகோலமாக தெருத் திண்ணையிலே தூங்கிக் கொண்டிருக்கிறது. அவைகளை காப்பாற்றபோலீசார் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதற்கு நாம் காவல்துறையை ஊக்குவிக்கவேண்டும்.

காவல் துறையினருக்கு வீடுகட்டித் தரவேண்டும்.

முன்பு முசிறிபுத்தன் தாக்கப்பட்டார். அந்த வழக்குகள் கவர்னர்ஆட்சியிலே நிறுத்தப்பட்டன.

எந்தக் கட்சியின் அலுவலகமாக இருந்தாலும் கடமையை மறந்து செயலாற்றும் காவலருக்கு அரசு தண்டனை கொடுக்க வேண்டும்.

இவ்வாறு திருப்பூர் மணிமாறன் கூறினார்.

## தொண்டாமுத்தூர் சின்னராஜ்

கழக உறுப்பினர் தொண்டாமுத்தூர் சின்னராஜ் பேசும்போது, கூறியதாவது:-

போலீசாருக்கு வீட்டு வசதிகள் செய்து தரப்பட வேண்டும் என்னுடைய தொகுதியிலுள்ள ஆலாந்துறையில் காவல் நிலையம் ஒன்றை ஏற்படுத்தித் தர வேண்டும்.

இவ்வாறு சின்னராஜ் கூறினார்.

## ப. நெடுமாறன்

சட்டப்பேரவையில் காமராஜ் காங்கிரஸ் உறுப்பினர் ப நெடுமாறன் பேசும்போது கூறியதாவது:-

காவலர்களின் வேலை நேரத்தை 8 மணியாக மாற்றிய புரட்சித் தலைவரை நான் பாராட்டுகிறேன்.

நெல்லை, தஞ்சை, வடாற்காடு போன்ற மாவட்டங்களை இரண்டாக பிரிக்கவேண்டும்.

இவ்வாறு ப. நெடுமாறன் கூறினார்.

எஸ் எம் துறைராஜு"க்கு

# ஆரணியில் பாராட்டு கூட்டம்

சென்னை, ஜுலை 26- ஆரணி நகர அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்சார்பாக தமிழ்நாடு அரிஜன வீட்டு வசதி வாரிய தலைவர் எஸ்எம் துரைராஜிக்கு பாராட்டு விழா கூட்டம் ஆரணி பஜார் வீதியில் 28-ந்தேதி மாலை 8 மணி அளவில் டி எம் ராமச்சந்திரன் தலைமையில் ஏ கிருஷ்ணன் முன்னிலையில் நடைபெறுகிறது.

கூட்டத்தில் பேசுவோர், டாக்டர் சமரசம் எம் எல் ஏ, ஆர் சக்கரபாணி எம் எல் ஏ, உக்கம்சந்த் எம் எல் ஏ, சி குப்புசாமி எம் எல் ஏ, காடுவெட்டி, கண்ணப்பன் எம் எல் சி, அனகாபுத்தூர்ராமலிங்கம் எம்.எல்.சி. திருப்பத்தூர் ராமமூர்த்தி மற்றும் பலர் கூட்டத்திற்கு முன்பு வண்ணை முத்துகுமார் லதா குழுவினரின் கலா நிகழ்ச்சி நடைபெறும்.

*

மீனவர்பயிற்சிநிலையமாணவர்

# உதவித்தொகை உயர்த்த அரசு பரிசீலனை

சென்னை, ஜுலை26- மீனவர் பயிற்சி நிலையங்ளில் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு அளிக்கப்படும் உதவித் தொகையை ரூ, 50 லிருந்து உயர்த்துவது பற்றி அரசு பரிசீலனை செய்து வருகிறது சென்னை கடலூர், நாகை, தூத்துக்குடி, குளச்சல், மண்டபம் ஆகிய 6 இடங்களில்உள்ள மீனவர் பயிற்சி நிலையங்களில் ஆண்டுதோறும் 310க்கு மேற்பட்டவர்கள் பயிற்சிபெறுகிறார்கள் என சட்டசபையில் கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில்நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினர்.

மன்றம் - கிளைக்கழக சார்பில்

# நீலங்கரையில் ஏழைகளுக்கு உணவு

சென்னை, ஜுலை 26- முதல்வர் புரட்சித்தலைவர் மீண்டும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதையொட்டி தாம்பரம் தொகுதியைச் சேர்ந்த நீலங்கரை கிளைக் கழகம் சார்பிலும் நீலங்கரை இதயக்கனி எம்.ஜி. ஆர் நற்பணி மன்றம் சார்பிலும் நாளை (ஞாயிறு) பகல்12மணிக்கு ஏழை மக்களுக்கு உணவு வழங்குகின்றனர்.

## பேச்சாளர் முகவரி

நாஞ்சில் புதுமையாளன்

17/11, இந்திரா நகர்

அடையாறு

சென்னை - 20








Published by K. Ravindran on behalf of Thangamani publications, 275 Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at print House, 1. First Main Road. United India Colony Madras-24

Editor : E. PARASURAMAN